[7th February 1959

**Sri D. S. AUTHIMOOLAM** : அந்த ரோடின் எஸ்டிமேட் தொகை எவ்வளவு ? நிதி நிலைமை இல்லாததனால் அந்த ரோடின் வேலை நடப்பதற்கு என்ன வசதி செய்யப்படுகிறது ?

**The Hon. Srimathi LOURDHAMMAL SIMON** : எஸ்டிமேட் வேண்டுமென்றால் தனிக் கேள்வி போடவேண்டும்.

### *New Colleges*

* **101Q.—Sri S. M. ANNAMALAI** : நிதி அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

புதிய கல்லூரிகளை ஏற்படுத்த திட்டம் ஏதேனும் உண்டா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : No, Sir.

**Sri S. M. ANNAMALAI** : மாணவர்கள் அதிகமாகப் படிக்க கல்லூரிக்கு வருகிற நேரத்தில் கல்லூரிகளில் இடம் இன்மையினால் அவர்கள் படிப்பை நிறுத்த வேண்டியிருக்கிறது. கல்லூரிகளில் அதிக மாணவர்களைச் சேர்த்துக் கொள்ள வேண்டும். அல்லது புதுக் கல்லூரிகளை ஏற்படுத்த வேண்டும். புதுக் கல்லூரிகளை ஏற்படுத்தும் உத்தேசம் இல்லை என்று சொல்வதற்குக் காரணம் பணம் இல்லை என்ற காரணம் தானா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM**:இப்படித்தான் தப்பானபுள்ளிவிவரங்களை வைத்துக் கொண்டு திராவிட முன்னேற்றக் கழகத்தினர்கள் பேசுவது வழக்கமாக இருக்கிறது. இன்றைக்கு 10 ஆயிரத்துக்கு மேற்பட்ட மாணவர்கள் கல்லூரிகளில் சேர்ந்து படிப்பதற்கு வசதி இருக்கிறது. ஆனால் சேர வருகிறவர்கள் அவ்வளவு பேர்கள் இல்லை. மூவாயிரத்துக்கும் மேற்பட்ட மாணவர்கள் சேர்ந்து படிக்க கல்லூரிகளில் இடம் இருக்கிறது. ஸ்தானத்தைக் காலியாகவே வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இப்படி இருக்க கல்லூரிகளில் அதிக மாணவர்கள் வருவது போலவும், அங்கே இடமில்லை போலவும் இவர்கள் பேசி வருகிறார்கள்.

**Sri A. GOVINDASAMY** : தென்னாற்காடு மாவட்டத்தில் அண்ணாமலை யூனிவர்ஸிடி ஒன்றுதான் இருக்கிறது. மேலும் கடலூரில் ஒரு கல்லூரி திறக்க அரசாங்கம் முன்வருமா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இப்போது இருக்கக் கூடிய கல்லூரிகளிலேயே போதுமான மாணவர்கள் இல்லை. இன்னும் அதிகமாக மாணவர்கள் படிக்க வந்தாலும் இடம் இருக்கிறது ஆகவே ஒவ்வொரு ஊருக்கும் ஒரு கல்லூரி ஏற்படுத்துவது என்பது முடியாத காரியம்.

### *Abolition of untouchability*

* **102 Q.—Sri P. G. MANICKAM** : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) Phonogram இசைத்தட்டுகள் மூலமாகத் தீண்டாமை ஒழிப்புப் பிரசாரம் செய்ய சர்க்காரால் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றனவா?

(ஆ) அவ்வாறு எடுக்கப்பட்டுவரின், விவரங்கள் யாவை ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : (அ) எடுக்கப்பட்டு வருகின்றன.

(ஆ) தீண்டாமை ஒழிப்பை வலியுறுத்துவதற்காக சிறந்த பாடகர்களால் பாடப்பட்ட நான்கு பாடல்களைப் பதிவு செய்து இரு இசைத் தட்டுகள் தயாரிக்கப்பட்டன. ஒவ்வொன்றிலும் 500 தட்டுகளை அரசாங்கம் வாங்கி உள்ளது. இவற்றை கிராமபோன் வைத்துள்ள அதிகாரிகளுக்கும் ஏனைய சமூக நல சங்கங்களுக்கும் பிரசாரத்திற்காகக் கொடுக்கப்பட்டு வருகின்றன. இதுவரை சுமார் 120 தட்டுகள் கொடுக்கப்பட்டுள்ளன. மீதியுள்ளவற்றையும் விரைவில் வழங்குவதற்கான நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன